கோளவட் டம்பழைய நேமிவட் டத்திஞெடு
குப்புற்று வெற்பெட்டுமேழ்
குட்டத்தி னிற்கவிழ மூதண்ட வேதண்ட
கோதண்ட மோடுசக்ர
வாளவட் டஞ்சுழல மட்டித்து நட்டமிடு
மதுமத்தர் சுத்தநிர்த்த
வட்டத்தி னுக்கிசைய வொற்றிக்க னத்ததன
வட்டத்தை யொத்திட்டதோர்
தாளவட் டங்கொட்டு கைப்பாணி யொப்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (௫௫)

பொய்வந்த நுண்ணிடை நுடங்கக் கொடிஞ்சிப்
பொலந்தேரொ டமரகத்துப்
பொன்மேரு வில்லியை யெதிர்ப்பட்ட ஞான்றம்மை
பொம்மன்முலை மூன்றிலொன்று
கைவந்த கொழுநரொடு முள்ளப் புணர்ச்சிக்
கருத்தா னகத்தொடுங்கக்
கவிழ்தலை வணக்கொடு முலைக்கண் வைத்திடுமொரு
கடைக்கணைக் கமுதமூற்ற
மெய்வந்த நாணினொடு நுதல்வந் தெழுங்குறு
வெயர்ப்பினொ டுயிர்ப்புவீங்கும்
விம்மிதமு மாய்நின்ற வுயிரோவ மெனவூன்று
விற்கடை விரற்கடைதழீஇத்
தைவந்த நாணினொடு தவழ்தந்த செங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (௫௬)

பூமரு வெடிப்பமுகை விண்டதண் டலையீன்ற
புனைநறுந் தளிர்கள்கொய்தும்

பொய்தற் பிணாக்களொடு வண்டற் கலம்பெய்து
புழுதிவிளை யாட்டயர்ந்துங்
காமரு மயிற்குஞ்சு மடவனப் பார்ப்பினொடு
புறவுபிற வும்வளர்த்துங்
காந்தள்செங் கமலத்த கழுநீர் மணந்தெனக்
கண்பொத்தி விளையாடியுந்
தேமரு பசுங்கிள்ளை வைத்தூமுத் தாடியுந்
திரள்பொற் கழங்காடியுஞ்
செயற்கையா னன்றியு மியற்கைச் சிவப்பூறு
சேயிதழ் விரிந்ததெய்வத்
தாமரை பழுத்தகைத் தளிரொளி துளும்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (௩௫)

விண்ணளிக் குஞ்சுடர் விமானமும் பரநாத
வெளியிற் றுவாதசாந்த
வீடுங் கடம்புபொதி காடுந் தடம்பணை
விரிந்ததமிழ் நாடுநெற்றிக்
கண்ணளிக் குஞ்சுந் தரக்கடவுள் பொலியுமறு
காற்பீட மும்மெம்பிரான்
காமர்பரி யங்கக் கவின்றங்கு பள்ளியங்
கட்டிலுந் தொட்டிலாகப்
பண்ணளிக் குங்குதலை யமுதொழுகு குமுதப்
பசுந்தேற லூறலாடும்
பைங்குழவி பெருவிரல் சுவைத்துநீ பருகிடப்
பைந்தேற லூறவண்கைத்
தண்ணளிக் கமலஞ் சிவப்பூற வம்மையொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (௩௬)

சேலாட்டு வாட்கட் கருங்கடற் கடைமடை
திறந்தமுத மூற்றுகருணை
தெண்டிரை கொழித்தெறிய வெண்டிரை நெருப்பூட்டு
தெய்வக் குழந்தையைச்செங்
கோலாட்டு நின்சிறு கணைக்காற் கிடத்திக்
குளிப்பாட்டி யுச்சிமுச்சிக்
குஞ்சிக்கு நெய்போற்றி வெண்காப்பு மிட்டுவளர்
கொங்கையிற் சங்குவார்க்கும்
பாலாட்டி வாயிதழ் நெரித்தூட்டி யுடலிற்
பசுஞ்சுண் ணமுந்திமிர்ந்து
பைம்பொற் குறங்கினிற் கண்வளர்த் திச்சிறு
பருஉமணித் தொட்டிலேற்றித்
தாலாட்டி யாட்டுகைத் தாமரை முகிழ்த்தம்மை
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (௬௭)

வேறு

வானத் துருமொ டுடுத்திரள் சிந்த
மலைந்த பறந்தலையின்
மண்ணவர் பண்ணவர் வாளின் மறிந்தவர்
மற்றவர் பொற்றொடியார்
பானற் கணையு முலைக்குவ டும்பொரு
படையிற் படவிமையோர்
பைங்குடர் மூளையொ டும்புதி துண்டு
பசுந்தடி சுவைகாணுச்
சேனப் பந்தரி னலகைத் திரள்பல
குரவை பிணைத்தாடத்
திசையிற் றலைவர்கள் பெருநா ணெய்தச்
சிறுநா ணொலிசெய்யாக்

கூனற் சிலையி னெடுங்கணை தொட்டவள்
கொட்டுக சப்பாணி
குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி. (௲அ)

சமரிற் பிறகிடு முதியரு மபயரு
மெதிரிட் டமராடத்
தண்ட தரன்செல் கரும்பக டிந்திரன்
வெண்பக டோடுடையாத்
திமிரக் கடல்புக வருணன் விடுஞ்சுற
வருணன் விடுங்கடவுட்
டேரி னுகண்டெழ வார்வில் வழங்கு
கொடுங்கோல் செங்கோலா
இமயத் தொடும்வளர் குலவெற் பெட்டையு
மெல்லைக் கல்வினிறீஇ
எண்டிசை யுந்தனி கொண்டு புரந்து
வடாது கடற்றுறைதென்
குமரித் துறையென வாடு மடப்பிடி
கொட்டுக சப்பாணி
குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி. (௲க)

சென்றிடு வாளிகள் கூளிகள் காளிகள்
ஞாளியி லாளியெனச்
செருமலை செம்மலை முதலியர் சிந்தச்
சிந்திட நந்திபிரா
னின்றில னோடலு முன்னழ கும்மவன்
பின்னழ குங்காணு
நிலவுவி ரிந்திடு குறுநகை கொண்டு
நெடுங்கயி லைக்கிரியின்
மூன்றிலி னுடன் மறந்தம ராடியெோர்
மூரிச் சிலைகுனியா

முரிபுரு வச்சிலை கடைகுனி யச்சில
முளரிக் கணைதொட்டுக்
குன்றவி லாளியை வென்ற தடாதகை
கொட்டுக சப்பாணி
குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி. (௪௰)

வேறு

ஒழுகிய கருணையு வட்டெழ வைத்தவ ருட்பார்வைக்
குளநெகி ழடியர்ப வக்கடல் வற்றவ லைத்தோடிக்
குழையொடு பொருதுகொ லைக்கணை யைப்பிணை யைச்சீறிக்
குமிழொடு பழகிம தர்த்தக யற்கண்ம டப்பாவாய்
தழைகெழு பொழிலின்மு சுக்கலை மைப்புய லிற்பாயத்
தவழிள மதிகலை நெக்குகு புத்தமு தத்தோடே
மழைபொழி யிமயம யிற்பெடை கொட்டுக சப்பாணி
மதுரையில் வளரும டப்பிடி கொட்டுக சப்பாணி. (௪௧)

செழுமறை தெளியவ டித்தத மிழ்ப்பதி கத்தோடே
திருவரு ளமுதுகு ழைத்துவி டுத்தமு லைப்பாலாற்
கழுமல மதலைவ யிற்றைநி ரப்பிம யிற்சேயைக்
களிறொடும் வளரவ ளர்த்தவ ருட்செவி லித்தாயே
குழலிசை பழகிமு ழப்பிர சத்திர சத்தோடே
குதிகொளு நறியக னிச்சுவை நெக்கபெ ருக்கேபோன்
மழலையி னமுதுகு சொற்கிளி கொட்டுக சப்பாணி
மதுரையில் வளரும டப்பிடி கொட்டுக சப்பாணி. (௪௨)

## ரு. முத்தப்பருவம்

காலத் தொடுகற் பனைகடந்த
கருவூ லத்துப் பழம்பாடற்
கலைமாச் செல்வர் தேடிவைத்த
கடவுண் மணியே யுயிரால
வாலத் துணர்வு நீர்பாய்ச்சி
வளர்ப்பார்க் கொளிபூத் தருள்பழுத்த
மலர்க்கற் பகமே யெழுதாச்சொன்
மழலை ததும்பு பசுங்குதலைச்
சோலைக் கிளியே யுயிர்த்துணையாந்
தோன்றாத் துணைக்கோர் துணையாகித்
துவாத சாந்தப் பெருவெளியிற்
றுரியங் கடந்த பரநாத
மூலத் தலத்து முளைத்தமுழு
முதலை முத்தந் தருகவே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தந் தருகவே.      (சுரு)

உருகி யுருகி நெக்குநெக்கு
ளுடைந்து கசிந்திட் டசும்பூறு
முழுவ லன்பிற் பழவடியா
ருள்ளத் தடத்தி லூற்றெடுத்துப்
பெருகு பரமா னந்தவெள்ளப்
பெருக்கே சிறியேம் பெற்றபெரும்
பேறே யூறு நறைக்கூந்தற்
பிடியே கொடிநுண் ணுசுப்பொசிய
வருகுங் குமக்குன் றிரண்டேந்து
மலர்ப்பூங் கொம்பே தீங்குழலின்
மதுரங் கனிந்த பசுங்குதலை
மழலை யரும்பச் சேதாம்பன்

முருகு விரியுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தந் தருகவே. (௬௬)

கொழுதி மதர்வண் டுழக்குகுழற்
கோதைக் குடைந்த கொண்டலுநின்
குதலைக் கிளிமென் மொழிக்குடைந்த
குறுங்கட் கரும்புங் கூன்பிறைக்கோ
டுழுத பொலன்சீ றடிக்குடைந்த
செந்தா மரையும் பசுங்கழுத்துக்
குடைந்த கமஞ்சூற் சங்குமொழு
கொளிய கமுகு மழகுதொய்யி
லெழுது தடந்தோட் குடைந்ததடம்
பணையும் பணைமென் முலைக்குடைந்த
இணைமா மருப்புந் தருமுத்துன்
றிருமுத் தொவ்வா விகபரங்கண்
முழுதுந் தருவாய் நின்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தந் தருகவே. (௬௭)

மத்த மதமாக் கவுட்டொருநான்
மருப்புப் பொருப்பு மிசைப்பொலிந்த
வானத் தரசு கோயில்வளர்
சிந்தா மணியும் வடபுலத்தார்
நத்தம் வளர வளைகையர்கோ
னகரில் வளரும் வான்மணியு
நளினப் பொகுட்டில் வீற்றிருக்கு
நங்கை மனைக்கோர் விளக்கமெனப்
பைத்த சுடிகைப் படப்பாயற்
பதும நாபன் மார்பில்வளர்

பரிதி மணியு மெமக்கம்மை
பணியல் வாழி வேயீன்ற
முத்த முகந்த நின்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தந் தருகவே. (சசு)

கோடுங் குவடும் பொருதரங்கக்
குமரித் துறையிற் படுமுத்துங்
கொற்கைத் துறையிற் றுறைவாணர்
குளிக்குஞ் சலாபக் குவான்முத்து
மாடும் பெருந்தண் டுறைப்பொருநை
யாற்றிற் படுதெண் ணிலாமுத்து
மந்தண் பொதியத் தடஞ்சார
லருவி சொரியுங் குளிர்முத்தும்
வாடுங் கொடிநுண் ணுசுப்பொசிய
மடவ மகளி ருடனாடும்
வண்டற் றுறைக்கு வைத்துநெய்த்து
மணந்தாழ் நறுமென் புகைப்படல
மூடுங் குழலாய் நின்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தந் தருகவே. (சஎ)

வேறு

பைவைத்த தூத்திப் பருஉச்சுடிகை முன்றிற்
பசுங்கொடி யுடுக்கைகிழியப்
பாயிருட் படலங் கிழித்தெழு சுடர்ப்பரிதி
பரிதிக்கொடிஞ்சி மான்றேர்
மொய்வைத்த கொய்யுளை வயப்புரவி வாய்ச்செல்ல
முட்கோல் பிடித்துநெடுவான்

முற்றத்தை யிருள்பட விழுங்குந் துகிற்கொடி
மூனைக்கணை வடிம்புநக்கா
மைவைத்த செஞ்சிலையு மம்புலியு மோடநெடு
வான்மீன் மணந்துகந்த
வடவரை முகந்தநின் வயக்கொடி யெனப்பொலியு
மஞ்சிவர் வளாகநொச்சித்
தெய்வத் தமிழ்க்கூட றழையத் தழைத்தவ
டிருப்பவள முத்தமருளே
சேல்வைத்த வொண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே. (௬அ)

பின்னற் றிரைக்கடன் மதுக்குட மறத்தேக்கு
பெய்முகிற் காருடலம்வெண்
பிறைமதிக் கூன்குயக் கைக்கடைஞ ரொடுபுடை
பெயர்ந்திடை நுடங்கவொல்கு
மின்னற் றடித்துக் கரும்பொற் றொடிக்கடைசி
மெல்லியர் வெரீஇப்பெயரவான்
மீன்கணம் வெருக்கொள்ள வெடிவரால் குதிகொள்ளும்
விட்புலம் விளைபுலமெனக்
கன்னற் பெருங்காடு கற்பகக் காட்டுவளர்
கடவுண்மா கவளங்கொளக்
காமதே னுவுமின்று கடைவாய் குதட்டக்
கதிர்க்குலை முதிர்ந்துவிளையுஞ்
செந்நெற் படப்பைமது ரைப்பதி புரப்பவ
டிருப்பவள முத்தமருளே
சேல்வைத்த வொண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே. (௬௧)

சங்கோ லிடுங்கடற் றுனைக்கு வெந்திடு
தராபதிகண் முன்றிறார்த்த
தமனியக் குப்பையுந் திசைமுதல்வர் தடமுடித்
தாமமுந் தலைமயங்கக்

கொங்கோ விடுங்கைக் கொடுங்கோ லொடுந்திரி
குறும்பன் கொடிச்சுறவுநின்
கொற்றப் பதாகைக் குழாத்தினொடு மிரசதக்
குன்றினுஞ் சென்றுலாவப்
பொங்கோல வேலைப் புறத்தினொ டகத்தினிமிர்
போராழி பரிதியிரதப்
பொங்காழி மற்றப் பொருப்பாழி யிற்றிரி
புலம்பப் புலம்புசெய்யச்
செங்கோ றிருத்திய முடிச்செழியர் கோமக
டிருப்பவள முத்தமருளே
சேல்வைத்த வொண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே. (௩0)

வேறு

பருவரை முதுபல தடியினி னெடுநில
னெக்கக டக்கனியிற்
படுநறை படுநறை கடமுடை படுவக
டுப்பவு வட்டெழவும்
விரிதலை முதலொடு விளைபுல முலையவு
ழக்கிய முட்சுறவின்
விசையினின் வழிநறை மிடறொடி கமுகின்வி
ழுக்குலை நெக்குகவுங்
கரையெறி புணரியி னிருமடி பெருகுத
டத்தும டுத்தகடக்
களிறொடு பிளிறிட விகலிய முகிலினி
ரட்டியி ரட்டியமும்
முரசதிர் கடிநகர் மதுரையில் வளர்கிளி
முத்தம ளித்தருளே
முழுதுல குடையதொர் கவுரியர் குலமணி
முத்தம ளித்தருளே. (௩௧)

புதையிருள் கிழிதர வெழுதரு பரிதிவ
ளைத்தக டற்புவியிற்
பொதுவற வடிமைசெய் திடுவழி யடியர்பொ
ருட்டலர் வட்டணையிற்
றதைமலர் பொதுளிய களியளி குமிறுகு
ழற்றிரு வைத்தவளச்
சததள முளரியின் வனிதையை யுதவுக
டைக்கண்ம டப்பிடியே
பதுமமொ டொழுகொளி வளையுமி னளினமு
கத்தும் டற்றுமுறப்
பனிமதி யொடுசுவை யமுதமு நுதலொடு
சொற்குத லைக்கணிநீ இ
முதுதமி ழுததியில் வருமொரு திருமகண்
முத்தம ளித்தருளே
முழுதுல குடையதொர் கவுரியர் குலமணி
முத்தம ளித்தருளே. (௫உ)



## ௬. வருகைப்பருவம்

அஞ்சிலம் போலிட வரிக்குரற் கிண்கிணி
யாற்றுசெஞ் சீறடிபெயர்த்
தடியிடுந் தொறுநின் னலத்தகச் சுவடுபட்
டம்புவி யரம்பையர்கட
மஞ்சுதுஞ் சளகத் திளம்பிறையு மெந்தைமுடி
வளரிளம் பிறையுநாற
மணிநூ புரத்தவிழு மென்குரற் கோவசையு
மடநடைக் கோதொடர்ந்துன்
செஞ்சிலம் படிபற்று தெய்வக் குழாத்திநொடு
சிறையோதி மம்பின்செலச்

சிற்றிடைக் கொல்கிமணி மேகலை யிரங்கத்
திருக்கோயி லெனவெனெஞ்சக்
கஞ்சமுஞ் செஞ்சொற் றமிழ்க்கூட லுங்கொண்ட
காமர்பூங் கொடிவருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கண்ணி யகிவருகவே. (௩௩)

குண்டுபடு பேரகழி வயிறுளைந் தீன்றபைங்
கோதையும் மதுரமொழுகுங்
கொழிதமிழ்ப் பனுவற் றுறைப்படியு மடநடைக்
கூந்தலம் பிடியுமறுகால்
வண்டுபடு முண்டக மனைக்குடி புகச்சிவ
மணங்கமழ விண்டதொண்டர்
மானதத் தடமலர்ப் பொற்கோயில் குடிகொண்ட
மாணிக்க வல்லிவில்வே
டுண்டுபடு மதிநுதற் றேகையொடு மளவில்பல
தொல்லுரு வெடுத்தமர்செயுந்
தொடுசிலை யெனக்ககன முகடுமுட் டிப்பூந்
துணர்த்தலை வணங்கிநிற்குங்
கண்டுபடு கன்னல்பைங் காடுபடு கூடற்
கலாபமா மயில்வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கண்ணி யகிவருகவே. (௩௪)

முயல்பாய் மதிக்குழவி தவழ்சூ லடிப்பலவின்
முட்பொதி குடக்கனியொடு
முடவுத் தடந்தாழை முப்புடைக் கனிசிந்த
மோதிநீ ருண்டிருண்ட
புயல்பாய் படப்பைத் தடம்பொழில்க ளன்றியேழ்
பொழிலையு மொருங்கலைத்துப்
புறமூடு மண்டச் சுவர்த்தல மிடித்தப்
புறக்கடன் மடுத்துழக்கிச்

செயல்பாய் கடற்றுளை செங்களங் கொளவம்மை
திக்குவிச யங்கொண்டநா
டெய்வக் கயற்கொடிக டிசைதிசை யெடுத்தெனத்
திக்கெட்டு முட்டவெடிபோய்க்
கயல்பாய் குரம்பணை பெரும்பணைத் தமிழ்மதுரை
காவலன் மகள்வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கணு யகிவருகவே. (ருரு)

வடம்பட்ட நின்றுணைக் கொங்கைக் குடங்கொட்டு
மதுரவமு துண்டுகடைவாய்
வழியும்வெள் ளருவியென நிலவுபொழி கிம்புரி
மருப்பிற் பொருப்பிடித்துத்
தடம்பட்ட பொற்று சிந்தூரங் கும்பத்
தலத்தணிவ தொப்பவப்பிச்
சலராசி யேழுந் தடக்கையின் முகந்துபின்
றுனநீ ரானிரப்பி
முடம்பட்ட மதியங் குசப்படை யெனக்ககன
முகடுகை தடவியுடுமீன்
முத்தம் பதித்திட்ட முகபடா மெனவெழு
முகிற்படா நெற்றிசுற்றுங்
கடம்பட்ட சிறுகட் பெருங்கொலைய மழவிளங்
களிறீன்ற பிடிவருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கணு யகிவருகவே. (ருசு)

தேனொழுகு கஞ்சப் பொலன்சீ றடிக்கூட்டு
செம்பஞ்சி யின்குழம்பாற்
றெள்ளமு திறைக்கும் பசுங்குழவி வெண்டிங்கள்
செக்கர்மதி யாக்கரைபொரும்
வானொழுகு துங்கத் தரங்கப் பெருங்கங்கை
வாணிநதி யாச்சிவபிரான்

மகுடகோ டீரத் தடிச்சுவ டழுத்தியிடு
மாரகதக் கொம்புகதிர்கான்
மீனொழுகு மாயிரு விசும்பிற் செலுங்கடவுள்
வேழத்தின் மத்தகத்து
வீற்றிருக் குஞ்சே யிழைக்கும் பசுங்கமுகு
வெண்கவரி வீசும்வாசக்
கானொழுகு தடமலர்க் கடிபொழிற் கூடல்வளர்
கவுரியன் மகள்வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கண்ணா யகிவருகவே. (௫௭)

வேறு

வடக்குங் குமக்குன் றிரண்டேந்தும்
வண்டன் மகளிர் சிறுமுற்றில்
வாரிக் குவித்த மணிக்குப்பை
வானா றடைப்ப வழிபிழைத்து
நடக்குங் கதிர்பொற் பரிசிலா
நகுவெண் பிறைகைத் தோணியதா
நாண்மீன் பரப்புச் சிறுமிதப்பா
நாப்பண் மிதப்ப நாற்கோட்டுக்
கடக்குஞ் சாத்தின் மதநதியுங்
கங்கா நதியு மெதிர்கொள்ளக்
ககன வெளியுங் கற்பகப்பூங்
காடுங் கடந்து கடல்சுருங்க
மடுக்குந் திரைத்தண் டுறைவைகை
வளநாட் டரசே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (௫௮)

சுண்ணந் திமிர்ந்து தேனருவி
துளைந்தா டறுகாற் றும்பிபசுந்

## வருகைப்பருவம்

தோட்டுக் கதவந் திறப்பமலர்த்
தோகை குடிபுக் கோகைசெயுந்
தண்ணங் கமலக் கோயில்பல
சமைத்த மருதத் தச்சன்முழு
தாற்றுக் கமுகு நாற்றியிடுந்
தடங்கா வணப்பந் தரில்வீக்கும்
விண்ணம் பொதிந்த மேகபடா
மிசைத்தூக் கியபன் மணிக்கொத்து
விரிந்தா லெனக்கா னிமிர்ந்துதலை
விரியுங் குலைநெற் கற்றைபல
வண்ணம் பொலியும் பண்ணைவயன்
மதுரைக் கரசே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (௯௧)

தகரக் குழலி னறையுநறை
தருதீம் புகையுந் திசைக்களிற்றின்
றடக்கை நாசிப் புழைமடுப்பத்
தளருஞ் சிறுநுண் மருங்குல்பெருஞ்
சிகரக் களபப் பொம்மன்முலைத்
தெய்வ மகளிர் புடையிரட்டுஞ்
செங்கைக் கவரி முகந்தெறியுஞ்
சிறுகாற் கொசிந்து குடிவாங்க
முகரக் களிவண் டடைகிடக்கு
முளரிக் கொடிக்குங் கலைக்கொடிக்கு
முருந்து முறுவல் விருந்திடுபுன்
மூர னெடுவெண் ணிலவெறிப்ப
மகரக் கருங்கட் செங்கனிவாய்
மடமான் கன்று வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (௯௰)

தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ்
சுவையே யகந்தைக் கிழங்கையகழ்ந்
தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடு
மிளமென் பிடியே யெறிதரங்க
முடுக்கும் புவனங் கடந்துநின்ற
வொருவன் றிருவுள் ளத்திலழ
கொழுக வெழுதிப் பார்த்திருக்கு
முயிரோ வியமே மதுகரம்வாய்
மடுக்குங் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (சுக)

பெருந்தே னிறைக்கு நறைக்கூந்தற்
பிடியே வருக முழுஞானப்
பெருக்கே வருக பிறைமௌலிப்
பெம்மான் முக்கட் சுடர்க்கிடுநல்
விருந்தே வருக மும்முதற்கும்
வித்தே வருக வித்தின்றி
விளைக்கும் பரமா னந்தத்தின்
விளைவே வருக பழமறையின்
குருந்தே வருக வருள்பழுத்த
கொம்பே வருக திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளங்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர்
மருந்தே வருக பசுங்குதலை
மழலைக் கிளியே வருகவே

மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (சுஉ)



## எ. அம்புலிப்பருவம்

---

கண்டுபடு குதலைப் பசுங்கிளி யிவட்கொரு
கலாபேத மென்னநின்னைக்
கலைமறைகண் முறையிடுவ கண்டோ வலாதொண்
கலாநிதி யெனத்தெரிந்தோ
வண்டுபடு தெரியற் றிருத்தாதை யார்மரபின்
வழிமுத லெனக்குறித்தோ
வளர்சடை முடிக்கெந்தை தண்ணறுங் கண்ணியா
வைத்தது கடைப்பிடித்தோ
குண்டுபடு பாற்கடல் வருந்திருச் சேடியொடு
கூடப் பிறந்ததோர்ந்தோ
கோமாட்டி யிவணின்னை வம்மெனக் கொம்மெனக்
கூவிடப் பெற்றுயனைக்
கண்டுபடு சீரிதன் றுதலா லிவளுட
னம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாடவாவே. (சுங)

குலத்தோடு தெய்வக் குழாம்பிழிந் தூற்றிக்
குடித்துச் சுவைத்துமிழ்ந்த
கோதென்று மழல்விடங் கொப்பளிக் கின்றவிரு
கோளினுஞ் சிட்டமென்றுங்
கலைத்தோடு மூடிக் களங்கம் பொதிந்திட்ட
கயரோகி யென்றுமொருநாள்

கண்கொண்டு பார்க்கவுங் கடவதன் றெனவுங்
கடற்புவி யெடுத்திகழவிட்
புலத்தோடு முடுமீன் கணத்தோடு மோடுநின்
போல்வார்க்கு மாபாதகம்
போக்குமித் தலமலது புகலில்லை காண்மிசைப்
பொங்குபுனல கறபகக்கா
டலைத்தோடு வைகைத் துறைப்படி மடப்பிடியொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாடவாவே. (சுச)

கீற்றுமதி யெனநிலவு தோற்றுபரு வத்திலொளி
கிளர்நுதற் செவ்விவவ்விக்
கெண்டைத் தடங்கணெ ருவிட டிறைஞ்சக்
கிடந்தது முடைந்தமுதம்விண்
டூற்றுபுது வெண்கலை யுடுத்துமுழு மதியென
வுதித்தவமை யத்துமிம்மை
யொண்முகத் தொழுகுதிரு வழகைக் கவர்ந்துகொண்
டோடினது நிற்கமற்றை
மாற்றவ ளொடுங்கேள்வர் மௌலியி லுறைந்தது
மறந்துனை யழைத்தபொழுதே
மற்றிவள் பெருங்கருணை சொற்றிடக் கடவதோ
மண்முழுதும் விம்முபுயம்வைத்
தாற்றுமுடி யரசுதவு மரசிளங் குமரியுட
னம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாடவாவே. (சுரு)

விண்டலம் பொலியப் பொலிந்திடுதி யேலுனது
வெம்பணிப் பகைவிழுங்கி
விக்கிடக் கக்கித் தொக்கிடர்ப் படுதிவெயில்
விரியுஞ் சுடர்ப்பரிதியின்

மண்டலம் புக்கனை யிருத்தியெனி னுன்னொளி
மழுங்கிட வழுங்கிடுதிபொன்
வளர்சடைக் காட்டெந்தை வைத்திடப் பெறுதியேன்
மாசுணஞ் சுற்றவுச்சங்
கொண்டுகண் டுஞ்சா திருப்பது மருப்பொங்கு
கோதையிவள் சீறடிகணின்
சுடர்குழும் பிடவே குமைப்பதும் பெறுதியெங்
கோமாட்டி பாலடைந்தா
லண்டபகி ரண்டமு மகண்டமும் பெறுதியா
லம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாடவாவே. (சுசு)

எண்ணில்பல புவனப் பெருந்தட்டை யூடுருவி
யிவள்பெரும் புகழ்நெடுகிலா
எங்கணு நிறைந்திடுவ தங்கதனின் மெள்ளாற்
யெள்ளளவு மொண்டுகொண்டு
வெண்ணிலவு பொழிவது கிடைத்தனை மடுத்திவள்
விழிக்கடை கொழித்தகருணை
வெள்ளத் திளைத்தாடு பெற்றியாற் றண்ணளி
விளைப்பதும் பெற்றனைகொலா
மண்ணிலொண் பைங்கூழ் வளர்ப்பது னிடத்தம்மை
வைத்திடுஞ் சத்தியேகாண்
மற்றொரு சுதந்தர நினக்கென விலைக்கலை
மதிக்கடவு ணீயுமுணர்வா
யண்ணலங் களியானை யரசர்கோ மகளுட
னம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாடவாவே. (சுஎ)

முன்பும்ப ரரசுசெய் பெரும்பாவ மூங்கோப
மூரிமாத் தொடர்சாபமு

முன்மைத் தமிழ்ச்செழியன் வெப்பொடு கொடுங்கூனு
மோசித்த வித்தலத்தின்
றன்பெருந் தன்மையை யுணர்ந்திலைகொல் சிவராச
தானியாய்ச் சீவன்முத்தித்
தலமுமாய்த் துவாதசாந் தத்தலமு மானதித்
தலமித்த லத்தடைதியேன்
மன்பெருங் குரவற் பிழைத்தபா வமுமற்றை
மாமடிக ளிடுசாபமும்
வளரிளம் பருவத்து நரைதிரையு முதிர்கூனு
மாற்றிடப் பெறுதிகண்டா
யன்பரென் புருகக் கசிந்திடு பசுந்தேனொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாடவாவே. (௬அ)

கும்பஞ் சுமந்தமத வெள்ளநீர் கொட்டுங்
கொடுங்களி றிடும்போர்வையான்
குடிலகோ டீரத் திருந்துகொண் டந்நலார்
கொய்தளிர்க் கைவருடவுஞ்
செம்பஞ் சுறுத்தவும் பதைபதைத் தாரழற்
சிகையெனக் கொப்பளிக்குஞ்
சீறடிகள் கன்றிச் சிவந்திடச் செய்வதுந்
திருவுளத் தடையாதுபொற்
றம்பஞ் சுமந்தீன்ற மானுட விலங்கின்
றனிப்புதல்வ னுக்குவட்டத்
தண்குடை நிழற்றுநினை வம்மென வழைத்தன
டழைத்திடு கழைக்கரும்பொன்
றம்பஞ் சுடன்கொண்ட மகரக் கொடிக்கொடியொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாடவாவே. (௬௯)

துளிதூங்கு தெள்ளமுத வெள்ளருவி பொழியுநின்
றொன்மரபு தழையவந்து
தோன்றிடுங் கௌரியர் குலக்கொழுந் தைக்கண்டு
துணைவிழியு மனமுநின்று
களிதூங்க வளவளாய் வாழாம லுண்ணமுது
கலையொடு மிழந்துவெறுமட்
கலத்திடு புதுக்கூ ழினுக்கிரவு பூண்டொரு
களங்கம்வைத் தாயிதுவலா
லொளிதூங்கு தெளிவிசும் பினிநின்னொ டொத்தவ
னொருத்தன் கரத்தின்வாரி
யுண்டொதுக் கியமிச்சி னள்ளிருளி லள்ளியுண்
டோடுகின் றுயென்செய்தா
யளிதூங்கு ஞிமிறெழுந் தார்க்குங் குழற்றிருவொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாடவாவே. (எ௰)

மழைக்கொந் தளக்கோதை வம்மினென் றளவினீ
வந்திலை யெனக்கடுகலும்
வாண்முகச் செவ்விக் குடைந்தொதுங் கினவனெதிர்
வரவொல்கி யோபணிகள்கோ
ளிழைக்குங்கொல் பின்றொடர்ந் தெனவஞ்சி யோதாழ்த்
திருந்தனன் போலுமெனயா
மித்துணையு மொருவாறு தப்புவித் தோம்வெகுளி
யினியொரு பிழைப்பில்லைகாண்
டழைக்குந் துகிற்கொடி முகிற்கொடி திரைத்துமேற்
றலம்வளர் நகிற்கொடிகளைத்
தாழ்குழலு நீவிநுதல் வெயர்வுந் துடைத்தம்மை
சமயமிது வென்றலுவலிட்
டழைக்குந் தடம்புரிசை மதுரைத் துரைப்பெணுட
னம்புலீ யாடவாவே

ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாடவாவே. (எக)

ஏடகத் தெழுதாத வேதச் சிரத்தா
சிருக்குமிவள் சீறடிகணின்
னிதயத் தடத்தும் பொலிந்தவா திருவுளத்
தெண்ணியன் றேகபடமா
நாடகத் தைந்தொழி னடிக்கும் பிரான்றெய்வ
நதியொடு முடித்தல்பெற்றாய்
நங்கையிவ டிருவுள மகிழ்ச்சிபெறி விதுபோலொர்
நற்றவப் பேறில்லைகாண்
மாடகக் கடைதிரித் தின்னரம் பார்த்துகிர்
வடிம்புதை வருமங்கலார்
மகரயாழ் மழலைக்கு மரவங்க ளுண்டுகில்
வழுங்கக் கொழுங்கோங்குதூங்
காடகப் பொற்கிழி யவிழ்க்குமது ரைத்திருவொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாடவாவே. (எஉ)

## அ. அம்மானைப்பருவம்

---

கரைக்குங் கடாமிரு கவுட்குட முடைந்தூற்று
களிறுபெரு வயிறுதூர்ப்பக்
கவளந் திரட்டிக் கொடுப்பதெனை வஞ்சூழ்ந்தொர்
கலைமதிக் கலசவமுதுக்
கிரைக்கும் பெருந்தேவர் புன்கண் டுடைத்திட
வெடுத்தமுத கலசம்வெவ்வே

## அம்மானைப்பருவம்

நீந்திடுவ தெனவுமுழு முத்திட் டிழைத்திட்ட
வெறிபந்தி னிரையென்னவும்
விரைக்குந் தளிர்க்கைக் கொழுந்தா மரைத்துஞ்சி
மீதெழுந் தார்த்தபிள்ளை
வெள்ளோ திமத்திரளி தெனவுங் கரும்பாறை
மீமிசைச் செஞ்சாந்துவைத்
தரைக்குந் திரைக்கைவெள் ளருவிவ்வ கைத்துறைவி
யம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடியருளே. (எரு)

திங்கட் கொழுந்தைக் கொழுந்துபடு படர்சடைச்
செருகுதிரு மணவாளன்மேற்
செழுமணைப் பந்தரி லெடுத்தெறியு மமுதவெண்
டிரளையிற் புரளுமறுகாற்
பைங்கட் சுரும்பென விசும்பிற் படர்ந்தெழும்
பனிமதி மிசைத்தாவிடும்
பருவமட மானென்னவெ னம்மனைநி னம்மனைப்
படைவிழிக் கயல்பாய்ந்தெழ
வெங்கட் கடுங்கொலைய வேழக்கு ழாமிதென
மேகக் குழாத்தைமுட்டி
விளையாடு மழகளிறு கடைவாய் குதட்டமுகை
விண்டவம் பைந்துகோத்த
அங்கட் கரும்பேந்து மபிடேக வல்லிதிரு
வம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடியருளே. (எசு

கள்ளூறு கஞ்சக் காதலூறு சேயொளி
கலப்பச் சிவப்பூறியுங்
கருணைப் பெருக்கூற் றமுதூறு பார்வைக்
கடைக்கட் கறுப்பூறியு

நன்ளூறு மறுவூ றகற்றுமுக மதியில்வெண்
ணகையூறு நிலவூறிய
நற்றாள வம்மனையொர் சிற்குணத் தினைமூன்று
நற்குணங் கதுவல்காட்ட
உள்ளூறு களிதுளும் பக்குரவ ரிருவீரு
முற்றிடு துவாதசாந்தத்
தொருபெரு வெளிக்கே விழித்துறங் குந்தொண்ட
ருழுவலன் பென்புருகநெக்
கள்ளூற வுள்ளே கசிந்தூறு பைந்தேற
லம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடியருளே. (எங)

குலைபட்ட காந்தட் டளிர்க்கையிற் செம்மணி
குயின்றவம் மனைநித்திலங்
கோத்தவம் மனைமுன் செலப்பின் செலுந்தன்மை
கோகனக மனையாட்டிபாற்
கலைபட்ட வெண்சுடர்க் கடவுடோய்ந் தேகவது
கண்டுகொண் டேபுழுங்குங்
காய்கதிர்க் கடவுளும் பின்றொடர்வ தேய்ப்பக்
கறங்கருவி தூங்கவோங்கு
மலைபட்ட வாரமும் வயிரமும் பிறவுமா
மாமணித் திரளைவாரி
மறிதிரைக் கையா லெடுத்தெறிய நாற்கோட்டு
மதகளிறு பிளிறியோடு
மலைபட்ட வைகைத் துறைச்சிறை யனப்பேடை
யம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடியருளே. (எச)

தமரான நின்றுணைச் சேடியரி லொருசிலர்
தடக்கையி னெடுத்தாடுகின்

றாளவம் மனைபிடித் தெதிர்வீசி வீசியிட
சாரிவல சாரிதிரியா
நிமிராமு னம்மனையொ ராயிர மெடுத்தெறிய
நிரைநிரைய தாய்க்ககனமேல்
நிற்கின்ற தம்மைநீ பெற்றவகி லாண்டமு
நிரைத்துவைத் ததுகடுப்ப
இமிரா வரிச்சுரும் பார்த்தெழப் பொழிலூ
டெழுந்தபைந் தாதுலகெலா
மிருள்செயச் செய்துநின் சேனு பராகமெனு
மேக்கமள காபுரிக்கு
மமரா வதிக்குஞ்செய் மதுரா புரித்தலைவி
யம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடியருளே. (எஎ)

உயிரா யிருக்கின்ற சேடியரின் மலர்மீ
துதித்தவ ளெதிர்த்துநின்றே
டொட்டியெட் டிப்பிடித் திட்டவம் மனைதேடி
யோடியா டித்திரியநீ
பெயரா திருந்துவிளை யாடுவது கண்டெந்தை
பிறைமுடி துளக்கமுடிமேற்
பெருகுசுர கங்கைநுரை பொங்கலம் மானையப்
பெண்கொடியு மாடன்மான
வெயரா மனம்புழுங் கிடுமமரர் தச்சனும்
வியப்பச் செயுந்தவளமா
மேடையுந் தண்டரள மாடமுந் தெண்ணிலா
வீசத் திசைக்களிறெலா
மயிரா வதத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி
யம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடியருளே. (எஅ)

வேறு

முத்தம ழுத்திய வம்மனை கைம்மலர்
முளரிம ணங்கமழ
மொய்குழல் வண்டுநின் மைவிழி வண்டின்
முயங்கி மயங்கியிடக்
கொத்து மணித்திர ளிற்செயு மம்மனை
குயிலின்மி ழற்றியநின்
குழலினி சைக்குரு கிப்பனி தூங்கு
குறுந்துளி சிந்தியிட
வித்துரு மத்தில ழைத்தவு நின்கை
விரற்பவ ளத்தளிரின்
விளைதரு மொள்ளொளி திருடப் போவது
மீள்வது மாய்த்திரிய
அத்தன் மனத்தெழு தியவுயி ரோவிய
மாடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
யாடுக வம்மனையே. (எக)

விளரிமி ழற்றளி குமிறுகு ழற்கொடி
வீசிய வம்மனைபோய்
விண்ணி னிரைத்தெழு வதுகக னந்திரு
மேனிய தானவருக்
கிளகில வுமிழ்பரு முத்தின் கோவை
யெடுத்தவர் திருமார்புக்
கிடுவ கடுப்பவு மப்பரி சேபல
மணியி னியற்றியிடும்
வளரொளி விம்பிய வம்மனை செல்வது
வானவி லொத்திடவு
மனனெக் குருகப் பரமா னந்த
மடுத்த திருத்தொண்டர்க்

களிகனி யத்திரு வருள்கனி யுங்கனி
யாடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
யாடுக வம்மனையே. (அ0)

கைம்மல ரிற்பொலி கதிர்முத் தம்மனை
நகைமுத் தொளிதோயக்
கண்டவர் நிற்கப் பிறர்சிலர் செங்கைக்
கமலச் சுடர்கதுவச்
செம்மணி யிற்செய் திழைத்தன வெனவுஞ்
சிற்சிலர் கட்கடையின்
செவ்வியை வவ்விய பின்கரு மணியிற்
செய்தன கொல்லெனவுந்
தம்மன மொப்ப வுரைப்பன மற்றைச்
சமயத் தலைவுபெறூர்
தத்தமி னின்று பிதற்றுவ பொருவத்
தனிமுதல் யாமென்பார்க்
கம்மனை யாயவர் தம்மனை யானவ
ளாடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
யாடுக வம்மனையே. (அக)

ஒள்ளொளி மரகத முழ்முழு நீலமு
மொண்டர ளத்திரளு
மொழுகொளி பொங்க விழைத்திடு மம்மனை
யொருமூன் றடைவிலெடாக்
கள்ளவிழ் கோதை விசும்புற வீசுவ
கண்ணுதல் பாற்செலவின்
கையில் வளர்த்த பசுங்கிளி யும்வளர்
காமர் கருங்குயிலும்
பிள்ளைவெ ளோதிம மும்முறை முறையாற்
பெருகிய காதலமேற்

பேச விடுப்ப கடுப்ப வணைத்தொரு
பெடையோ டரசவன
மன்னல் வயற்றுயின் மதுரைத் துரைமக
ளாடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
யாடுக வம்மனையே. (அஉ)



## கூ. நீராடற்பருவம்

வளையாடு வண்கைப் பொலன்சங் கொடும்பொங்கு
மறிதிரைச் சங்கொலிட
மதரரிக் கட்கயல் வரிக்கய லொடும்புரள
மகரந்த முண்டுவண்டின்
கிளையாடு நின்றிருக் கேசபா சத்தினொடு
கிளர்சைவ லக்கொத்தெழக்
கிடையாத புதுவிருந் தெதிர்கொண்டு தத்தமிற்
கேளிர்க டழீஇக்கொண்டெனத்
தளையாடு கறையடிச் சிறுகட் பெருங்கைத்
தடங்களி றெடுத்துமற்றத்
தவளக் களிற்றினொடு முட்டவிட் டெட்டுமத
தந்தியும் பந்தடித்து
விளையாடும் வைகைத் தடந்துறை குடைந்துபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (அகூ)

நிரைபொங் கிடுஞ்செங்கை வெள்வளை கலிப்பநனை
நிலவுவிரி பவளம்வெளிற
நீலக் கருங்குவளை செங்குவளை பூப்பவற
னெறிகுழற் கற்றைசரியத்

திரைபொங்கு தண்ணந் துறைக்குடைந் தாடுவ
செழுந்தரங் கக்கங்கைநுண்
சிறுதிவலை யாப்பொங்கு மானந்த மாக்கட
றிளைத்தாடு கின்றதேய்ப்பக்
கரைபொங்கு மறிதிரைக் கையாற் றடம்பணைக்
கழனியிற் கன்னியர்முலைக்
களபக் குழம்பைக் கரைத்துவிட் டள்ளற்
கருஞ்சேறு செஞ்சேறதாய்
விரைபொங் கிடத்துங்க வேகவதி பொங்குபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (அச)

பண்ணுறு கிளிமொழிப் பாவைநின் றிருமேனி
பாசொளி விரிப்பவந்தண்
பவளக் கொடிக்காமர் பச்சிளங் கொடியதாய்ப்
பருமுத்த மரகதமதாய்த்
தண்ணுறு மல்லற் றுறைச்சிறை யனங்களி
தழைக்குங் கலாமஞ்ஞையாய்ச்
சகலமுந் நின்றிருச் சொருபமென் றேவிடுஞ்
சதுர்மறைப் பொருள்வெளியிடக்
கண்ணுறு குழலியர் குடக்கொங்கை பொங்குசெங்
களபமுங் கத்தூரியுங்
கர்ப்புரமு மொக்கக் கரைத்தோடி வாணியுங்
காளிந்தி யுங்கங்கையாம்
விண்ணுறு மளவலாய் விளையாடு வைகைபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொடி கயற்கொரு கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (அரு)

தூங்குசிறை யறுகா லுறங்குகுழ னின்றுணைத்
தோழியர்கண் மேற்குங்குமந்

தோயும் பனித்துறைச் சிவிறிவீ சக்குறுந்
துளியெம் மருங்குமோடி
வாங்குமலை வில்லியார் விண்ணுரு நனைந்தவர்
வனைந்திடு திகம்பரஞ்செவ்
வண்ணமாச் செய்வதச் செவ்வான வண்ணரொடு
மஞ்சள்விளை யாடலெய்பத்
தேங்குமலை யருவிநெடு நீத்தத்து மாசுணத்
திரள்புறஞ் சுற்றியீர்ப்பச்
சினவேழ மொன்றொரு சுழிச்சுழல்வு மந்தரந்
திரைகடன் மதித்தன்மானும்
வீங்குபுனல் வைகைத் தடந்துறை குடைந்துபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (அசு)

துளிக்கும் பனித்திவலை சிதறக் குடைந்தாடு
துறையிற் றுறைத்தமிழொடுந்
தொன்மறை தெளிக்குங் கலைக்கொடி யெனுந்துணைத்
தோழிமுழ் கிப்புனன்மடுத்
தொளிக்கும் பதத்துமற் றவளென வனப்பேடை
யோடிப் பிடிப்பதம்மை
யொண்பரி புரத்தொனியு மடநடையும் வெளவின
துணர்ந்துபின் றொடர்வதேய்ப்ப
நெளிக்குந் தரங்கத் தடங்கங்கை யுடனெட்டி
நித்திலப் பந்தாடவு
நிரைமணித் திரளின் கழங்காட வுந்தன்
னெடுந்திரைக் கையெடுத்து
விளிக்கும் பெருந்தண் டுறைக்கடவுள் வைகைநெடு
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (அஎ)

வேறு

தூங்க முலைப்பொற் குடங்கொண்டு
தூநீர் நீந்தி விளையாடுந்
துணைச்சே டியர்கண் மேற்பசும்பொற்
சுண்ண மெறிய வறச்சேந்த
அங்கண் விசும்பி னின்குழற்காட்
டறுகாற் சுரும்ப ரெழுந்தார்ப்ப
தையன் றிருமே னியிலம்மை
யருட்கட் சுரும்பார்த் தெழன்மானச்
செங்க ணிளைஞர் களிக்காமத்
தீமூண் டிடக்கண் டிளமகளிர்
செழுமென் குழற்கூட் டகிற்புகையாற்
றிரள்காய்க் கதலி பழுத்துநறை
பொங்கு மதுரைப் பெருமாட்டி
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே. (அஅ)

இழியும் புனற்றண் டுறைமுன்றி
லிதுவெம் பெருமான் மண்சுமந்த
இடமென் றலர்வெண் கமலப்பெண்
ணிசைப்பக் கசிந்துள் ளுருகியிரு
விழியுஞ் சிவப்ப வானந்த
வெள்ளம் பொழிந்து நின்றனையான்
மீண்டும் பெருக விடுத்தவர்க்கோர்
வேலை யிடுதன் மிகையன்றே
பிழியு நறைக்கற் பகமலர்ந்த
பிரச மலர்ப்பூந் துகண்மூழ்கும்
பிறைக்கோட் டயிரா வதங்கூந்தற்
பிடியோ டாடத் தேனருவி

பொழியும் பொழிற்கூ டலிற்பொலிவாய்
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே. (அக)

மறிக்குந் திரைத்தண் புனல்வைகை
வண்ட லிடுமண் கூடைகட்டி
வாரிச் சுமந்தோர்க் கம்மைதுணை
மணிப்பொற் குடத்திற் கரைத்தூற்றும்
வெறிக்குங் குமச்சே றெக்கரிடும்
விரைப்பூந் துறைமண் போலொருத்தி
வெண்பிட் டிடவு மடித்தொருவன்
வேலை கொளவும் வேண்டுமெனக்
குறிக்கு மிடத்திற் றடந்துநீர்
குடையப் பெறினக் கங்கைதிருக்
கோட ரத்துக் குடியிருப்புங்
கூடா போலும் பொலன்குவட்டுப்
பொறிக்குஞ் சுறவக் கொடியுயர்த்தாய்
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே. (கய)

வேறு

சொற்கொடி யோடு மலர்க்கொடி கொய்து
தொடுத்த விரைத்தொடையுஞ்
சுந்தரி தீட்டிய சிந்துர மும்மிரு
துங்கக் கொங்கைகளின்
விற்கொடி கோட்டிய குங்கும மூங்குடை
வெள்ளங் கொள்ளைகொள
வெளியே கண்டுநின் வடிவழ கையன்
விழிக்கு விருந்துசெய

விற்கொடி யோடு கயற்கொடி வீர
னெடுத்த கருப்புவிலு
மிந்திர தனுவும் வணங்க வணங்கு
மிணைப்புரு வக்கொடிசேர்
பொற்கொடி யிமய மடக்கொடி வைகைப்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே. (கூக)

கொள்ளைவெ ளருவி படிந்திடு மிமயக்
கூந்தன் மடப்பிடிபோற்
கொற்கைத் துறையிற் சிறைவிரி யப்புனல்
குடையு மனப்பெடைபோ
றெள்ளமு தக்கட னடுவிற் றோன்று
செழுங்கம லக்குயில்போற்
றெய்வக் கங்கைத் திரையூ டெழுமொரு
செம்பவ ளக்கொடிபோற்
கள்ளவிழ் கோதையர் குழலிற் குழலிசை
கற்றுப் பொற்றருவிற்
களிநற வுண்ட மடப்பெடை யோடு
கலந்து முயங்கிவரிப்
புள்ளுறை பூம்பொழின் மதுரைத் துரைமகள்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே. (கூஉ)

## ௰. ஊசற்பருவம்

---

ஒள்ளொளிய பவளக் கொழுங்கான் மிசைப்பொங்கு
மொழுகொளிய வயிரவிட்டத்
தூற்றுஞ் செழுந்தண் ணிலாக்கால் விழுந்தனைய
வொண்டரள வடம்வீக்கியே
அள்ளிட வழிந்துசெற் றொளிதுளும் புங்கிரண
வருணரத் னப்பலகைபுக்
காடுநின் றோற்றமப் பரிதிமண் டலம்வளை
ரும்பெருஞ் சுடரையேய்ப்பத்
தெள்ளுசுவை யமுதங் கனிந்தவா னந்தத்
திரைக்கடன் மடுத்துழக்குஞ்
செல்வச் செருக்கர்கண் மனக்கமல நெக்கபூஞ்
சேக்கையிற் பழையபாடற்
புள்ளொலி யெழக்குடி புகுந்தசுந் தரவல்லி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (௯௩)

விற்பொலிய நிலவுபொழி வெண்ணித் திலம்பூண்டு
விழுதுபட மழகதிர்விடும்
வெண்டரள வூசலின் மிசைப்பொலிவ புண்டரிக
வீட்டிற் பொலிந்துமதுரச்
சொற்பொலி பழம்பாடல் சொல்லுநின் றவளநின்
சொருபமென் பதும்ளநிலாத்
தூற்றுமதி மண்டலத் தமுதமா யம்மைநீ
தோன்றுநின் றதும்விரிப்ப
எற்பொலிய வொழுகுமுழு மாணிக்க மணிமுகப்
பேறிமழை முகிறவழ்வதவ்

வெறிசுடர்க் கடவுடிரு மடியிலவன் மடமக
ளிருந்துவிளை யாடலேய்க்கும்
பொற்புரிசை மதுரா புரிப்பொலி திருப்பாவை
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (கச)

உருகிய பசும்பொன் னசும்பவெயில் வீசுபொன்
னூசலை யுதைந்தாடலு
மொண்டளி ரடிச்சுவ டுறப்பெற மசோகுநற
வொழுகுமலர் பூத்துதிர்வதுன்
றிருமுனுரு வங்கரந் தெந்தையார் நிற்பது
தெரிந்திட நமக்கிதுவெனுச்
செஞ்சிலைக் கள்வனொரு வன்றொடை மடக்காது
தெரிகணைகள் சொரிவதேய்ப்ப
எரிமணி குயின்றபொற் செய்குன்று மழகதி
ரெறிப்பவெழு செஞ்சோதியூ
டிளமதி யிமைப்பதுன் றிருமுகச் செவ்விவேட்
டெழுநாத் தலைத்தவமவன்
புரிவது கடுக்குமது ராபுரி மடக்கிள்ளை
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (கரு)

கங்கைமுடி மகிழ்நர்திரு வுளமசைந் தாடக்
கலந்தாடு பொன்னூசலக்
கடவுடிரு நோக்கத்து நெக்குருகி யிடநின்
கடைக்கணோக் கத்துமற்றச்
செங்கண்விடை யவர்மனமு மொக்கக் கரைந்துருகு
செய்கையவர் சித்தமேபொற்
றிருவூச லாவிருந் தாடுகின் றுயெனுஞ்
செய்தியை யெடுத்துரைப்ப

அங்கணெடு நிலம்விடர் படக்கிழித் தோடுவே
ரடியிற் பழுத்தபலவின்
னளிபொற் சுளைக்குடக் கனியுடைந் தூற்றுதே
னருவிபில மேழுமுட்டிப்
பொங்கிவழி பொழின்மதுர மதுரைநா யகிதிருப்
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (கசு)

சேர்க்குஞ் சுவைப்பாட லமுதொழுக வொழுகுபொற்
றிருவூசல் பாடியாடச்
சிவபிரான் றிருமுடி யசைப்பமுடி மேற்பொங்கு
செங்கணர வாசகிலம்மைத்
தார்க்கும் பணாடவி யசைப்பச் சராசரமு
மசைகின்ற தம்மனையசைந்
தாடலா லண்டமு மகண்ட பகி ரண்டமு
மசைந்தாடு கின்றதேய்ப்பக்
கார்க்கொந் தளக்கோதை மடவியர் குழற்கூட்டு
கமழ்நறும் புகைவிண்மிசைக்
கைபரந் தெழுவதுரு மாறிரவி மண்டலங்
கைக்கொள விருட்படலம்வான்
போர்க்கின்ற தொக்குமது ராபுரி மடக்கிள்ளை
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி.
பொன்னூச லாடியருளே. (கஎ)

தேர்க்கோல மொடுநின் றிருக்கோல முங்கண்டு
சிந்தனை புழுங்குகோபத்
தீயவிய மூண்டெழுங் காமா னலங்கான்ற
சிகையென வெழுந்துபொங்குந்
தார்க்கோல வேணியர்த முள்ளமென வேபொற்
றடஞ்சிலையு முருகியோடத்

தண்மதி முடித்ததும் வெள்விடைக் கொண்மணி
தரித்ததும் விருத்தமாகக்
கார்க்கோல நீலக் கருங்களத் தோடொருவர்
செங்களத் தேற்றலமாக்
கட்கணை தூக்குங் கரும்புருவ வில்லொடொரு
கைவிற் குனித்துநின்ற
போர்க்கோல மேதிரு மணக்கோல மானபெண்
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (கஅ)

குழியும் பசுங்கண் முசுக்கலை வெரீஇச்சிறு
குறும்பலவி னடியபாரக்
கொம்பொடி படத்தூங்கு முட்புறக் கனியின்
குடங்கொண்டு நீந்தமடைவாய்
வழியுங் கொழுந்தே னுவட்டெழு தடங்காவின்
வள்ளுகிர்க் கருவிரற்கூன்
மந்திக ளிருந்தேகும் விசையினில் விசைந்தெழு
மரக்கோடு பாயவயிறு
கிழியுங் கலைத்திங்க ளமுதருவி தூங்குவ
கிளைத்தவண் டுழுபைந்துழாய்க்
கேசவன் கால்வீச வண்டகோ ளகைமுகடு
கீண்டுவெள் ளருவிபொங்கிப்
பொழியுந் திறத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (கக)

ஒல்குங் கொடிச்சிறு மருங்கிற் கிரங்கிமெல்
லோதிவண் டார்த்தெழப்பொன்
னூசலை யுதைந்தாடு மளவின்மலர் மகளம்மை
யுள்ளடிக் கூன்பிறைதழீஇ

மல்குஞ் சுவட்டிணை வலம்புரிக் கீற்றிதுகொல்
வாணியென் றசதியாடி
மணிமுறுவல் கோட்டநின் வணங்கா முடிக்கொரு
வணக்கநெடு நாண்வழங்கப்
பில்கும் குறும்பனிக் கூதிர்க் குடைந்தெனப்
பிரசநா றைம்பாற்கிளம்
பேதையர்க ளூட்டுங் கொழும்புகை மடுத்துமென்
பெடையொடு வரிச்சுரும்பர்
புல்குந் தடம்பணை யுடுத்தமது ரைத்தலைவி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (ஙா)

கொன்செய்த செழுமணித் திருவூச லரமகளிர்
கொண்டாட வாடுந்தொறுங்
குறுமுறுவ னெடுநில வருந்துஞ் சகோரமாய்க்
கூந்தலங் கற்றைசுற்றுந்
தென்செய்த மழலைச் சுரும்பராய் மங்கைநின்
செங்கைப் பசுங்கிள்ளையாய்த்
தேவதே வன்பொலிவ தெவ்வுருவு மாமவன்
றிருவுருவின் முறைதெரிப்ப
மின்செய்த சாயலவர் மேற்றலத் தாடிய
விரைப்புனலி னருவிகுடையும்
வெள்ளானை குங்குமச் செஞ்சேறு நாறமட
மென்பிடியை யஞ்சிநிற்கும்
பொன்செய்த மாடமலி கூடற் பெருஞ்செல்வி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (ஙாக)

இருபதமு மென்குரற் கிண்கிணியு முறையிட்
டிரைத்திடு மரிச்சிலம்பு

மிறுமிறு மருங்கென் றிரங்குமே கலையும்பொ
னெழுதுசெம் பட்டுவீக்குந்
திருவிடையு முடைதார மும்மொட் டியாணமுஞ்
செங்கைப் பசுங்கிள்ளையுந்
திருமுலைத் தாளவுத் தரியமும் மங்கலத்
திருநாணு மழகொழுகநின்
றருள்பொழியு மதிமுகமு முகமதியி னெடுநில
வரும்புகுறு நகையுஞான
ஆனந்த மாக்கடல் குடைந்துகுழை மகரத்தொ
டமராடு மோடரிக்கட்
பொருகயலும் வடிவழகு பூந்தசுந் தரவல்லி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (௱உ)

மீனாக்ஷியம்மைபிள்ளைத்தமிழ்
முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்

மதுரை

# மீனாக்ஷியம்மைகுறம்

---

## காப்பு

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கார்கொண்ட பொழின்மதுரைக் கர்ப்பூர வல்லிமணங்
  கமழுந் தெய்வத்
தார்கொண்ட கருங்குழலங் கயற்கணா யகிகுறஞ்செந்
  தமிழாற் பாட
வார்கொண்ட புகர்முகத்தைங் கரத்தொருகோட் டிருசெவிமும்
  மதத்து நால்வாய்ப்
போர்கொண்ட கவுட்சிறுகட் சித்திவிநா யகன்றுணைத்தாள்
  போற்று வாமே.

### சிந்து

பூமருவிய பொழிறிகழ்மதுரா
புரிமருவிய வங்கயற்கணம்மை
தேமருவிய மதிதவழ்குடுமித்
தென்பொதியக் குறத்திநானம்மே. (க)

செந்நென்முத்துங் கன்னன்முத்துமொளி
திகழ்மதுரை யங்கயற்கணம்மை
பொன்னுமுத்துஞ் சொரியும்வெள்ளருவிப்
பொதியமலைக் குறத்திநானம்மே. (உ)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

செண்டிருக்கும் வடவரையிற் சேலிருக்கு மாசிருக்குந்
 தென்ன ரீன்ற
கண்டிருக்கு மதுரமொழிக் கணிவிருக்குந் துவரிதழுங்
 கயற்கட் பாவை
வண்டிருக்கு நறைக்கமல மலரிருக்கும் பரிபுரத்தாண்
 மனத்துள் வைத்துக்
கொண்டிருக்குந் தமிழ்முனிவன் குடியிருக்கும் பொதியமலைக்
 குறத்தி நானே. (ரு)

## சிந்து

மங்கைகுங்குமக் கொங்கைபங்கயச்
செங்கையங்கயற் கண்ணிஞள் மறைபண்ணிஞள்
பங்கனைக்கழ லங்கனைச்சொக்க
லிங்கனைக்கூடி மேவுவாய் கொல்லிப்பாவையே. (௬)

## மேற்படி வேறு

வஞ்சியேயப ரஞ்சியேமட மயிலேவரிக் குயிலே
கொஞ்சியேபழி யஞ்சியாருனைக் கூடுவாரினி யம்மே. (௭)

## மேற்படி வேறு

புழுகாலே தரைமெழுகு பிள்ளையார்வை
பொற்கோல மிட்டுநிறை நாழிவையாய். (௮)

## மேற்படி வேறு

ஆழிகைதா வழகாருமங் கயற்கணம்மை பங்க
ரழகியசொக்க ரருள்புரிவருன் பான்மருவி யம்மே. (௯)

## மேற்படி வேறு

பேசு மென்குறி மோச மென்றிடி
லார்சொ லும்பரி யாசமே
வாச மென்குழ லாய் சவுந்தர
மாறர் வந்தனை வாரம்மே. (௧௦)

### மேற்படி வேறு

நங்கை நீகரு துங்குறி சொல்லவுன்
செங்கை தனைக்கொடு வாவெங்க
ளங்க யற்கண்ணி பங்க ரருட்சொக்க
லிங்க ரினியனை வாரம்மே. (க0)

### மேற்படி வேறு

தூசுமொரு காசும்வையுண் ணேசம்வரவே சொல்லநா
னீசர்கயி லாசர்மது ரேசருனைச்சேர் வாரம்மே. (ம)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கைக்குறியின் முகக்குறிநன் றிடத்தெழுந்த கவுளிநன்று
கன்னி மார்வந்
திக்குறிநன் றென்கின்ற ரிடக்கண்ணுந் துடிக்கின்ற
திதன்மே லுண்டோ
பொய்க்குறிய சிறுமருங்குற் பூங்கொடிநீ யங்கயற்கட்
பூவை மாதின்
மெய்க்குறியும் வளைக்குறியு முலைக்குறியு மணிந்தவர்தோண்
மேவு வாயே. (கக)

### சிந்து

கடமலைக்கும் வெம்மலையாங் கைம்மலையு மாயிரவாய்ப்
படமலைக்கு மரவரசும் பரித்தருளும் பார்மடந்தை
குடமலைக்குந் தடமுலையாங் குலமலைக ளிரண்டெனவும்
வடமலைக்குந் தென்பொதியு மலயமலை யென்மலையே. (கஉ)

திங்கண்முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை
தங்குமுயல் சூழுமலை தமிழ்முனிவன் வாழுமலை
அங்கயற்கண் ணம்மைதிரு வருள்சுரந்து பொழிவதெனப்
பொங்கருவி தூங்குமலை பொதியமலை யென்மலையே. (கங)

கன்னமதம்பெய் துறங்குகொலைக் களிறுகிடந்து பிளிறுமலை
தென்னந்தமிழும் பசுங்குழவித் தென்றற்கொழுந்துந் திளைக்குமலை
அன்னம்பயிலும் பொழிற்கூட லறலங்கூந்தற் பிடியாண்ட
பொன்னங்குடுமித் தடஞ்சாரற் பொதியமலையென் மலையம்மே. ()

மந்தமா ருதம்வளரு மலையெங்கண் மலையே
வடகலைதென் கலைபயிலு மலையெங்கண் மலையே
கந்தவேள் விளையாடு மலையெங்கண் மலையே
கனகநவ மணிவிளையு மலையெங்கண் மலையே
இந்தமா நிலம்புரக்கு மங்கயற்கண் ணம்மை
இன்பமுறுந் தென்பொதிய மலையெங்கண் மலையே. (கஇ)

சிங்கமும்வெங் களிறுமுடன் விளையாடு மொருபாற்
சினப்புலியு மடப்பிணையுந் திளைத்திடுமங் கொருபால்
வெங்கரடி மரையினொடும் விளையாடு மொருபால்
விடவரவு மடமயிலும் விருந்தயரு மொருபா
லங்கணமர் நிலங்கவிக்கும் வெங்கவிகை நிழற்கீ
ழம்பொன்முடி சூடுமெங்க ளபிடேக வல்லி
செங்கமலப் பதம்பரவுங் கும்பமுனி பயிலுந்
தென்பொதிய மலைகாண்மற் றெங்கண்மலை யம்மே. (கசு)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கச்சைப் பொருது மதர்த்தெழுந்து கதிர்த்துப்
பணைத்த மணிக்கொங்கைப்
பச்சைப் பசுங்கொம் பங்கயற்கட் பாவை
பயந்த வாறிருதோட்
செச்சைப் படலை நறுங்குஞ்சிச் சிறுவன்
றனக்குப் பெருந்தடங்கட்
கொச்சைச் சிறுமி தனைக்கொடுத்த குறவர்
குலமெங் குலமம்மே- (கஎ)

## சிந்து

கொழுங்கொடியின் விழுந்தவள்ளிக் கிழங்குகல்லி யெடுப்போங்
குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக் கொடியில்வைத் துத் தொடுப் [போம்
பழம்பிழிந்த கொழுஞ்சாறுந் தேறலும்வாய் மடுப்போம்
பசுந்தழையு மரவுரியு மிசைந்திடவே யுடுப்போஞ்
செழுந்தினையு நறுந்தேனும் விருந்தருந்தக் கொடுப்போஞ்
சினவேங்கைப் புலித்தோலின் பாயலிற்கண் படுப்போ
மெழுந்துகயற் கணிகாலில் விழுந்துவினை கெடுப்போ
மெங்கள்குறக் குடிக்கடுத்த வியல்பிதுகா ணம்மே. (கஅ)

புல்வாயின் பார்வையைவெம் புலிப்பார்வை யிணங்கும்
புதுத்தினைகல் லுரற்பாறை முன்றிற்றோறு முணங்குங்
கல்விடரில் வரிவேங்கை கடமானோ டுறங்குங்
கருமலையில் வெள்ளருவி கறங்கிவழிந் திறங்குஞ்
சில்வலையும் பல்வாரு முன்னிறப்பிற் றூங்குஞ்
சிறுதுடியும் பெருமுரசுந் திசைதொறுநின் றேங்குங்
கொல்லையின்மான் பிணையுமிளம் பிடியும்விளை யாடுங்
குறிச்சியெங்கள் குறச்சாதி குடியிருப்ப தம்மே. (கக)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வெள்ளிமலைக் குறவன்மகன் பழனிமலைக் குறவனெங்கள்
வீட்டிற் கொண்ட
வள்ளிதனக் கேகுறவர் மலையாட்சி சீதனமாய்
வழங்கி னாராற்
பிள்ளைதனக் கெண்ணெயிலை யரைக்குமொரு துணியிலையென்
பிறகே வந்த
கள்ளிதனைக் கொண்டவன்றே குறவனுக்கு மெனக்குமிலை
கஞ்சி தானே. (உய)

## சிந்து

கூடல்புன வாயில்கொடுங் குன்றுபரங் குன்று
குற்றால மாப்பனூர் பூவணநெல் வேலி
ஏடகமா டானைதிருக் கானப்பேர் சுழிய
லிராமேசந் திருப்புத்தூ ரிவைமுதலாந் தலங்க
ளுடையெங்க ளங்கயற்கண் ணுண்டதமிழ்ப் பாண்டி
நன்னாடும் பிறநாடு மென்னாட தாகக்
காடுமலை யுந்திரிந்து குறிசொல்லிக் காலங்
கழித்தேனென் குறவனுக்குங் கஞ்சிவரா தம்மே. (உக)

பொற்றொடிவள் ளிக்கிளைய பூங்கொடியென் பாட்டி
பூமகண்மா யவன்மார்பிற் பொலிவளென்று சொன்னாள்
மற்றவள்பெண் களிலெங்கள் பெரியதாய் கலைமான்
மலரயனார் திருநாவில் வாழ்வளென்று சொன்னாள்
பெற்றவெங்கள் நற்றாயுஞ் சுந்தரியிந் திரன்றோள்
பெறுமென்றாள் பின்னெங்கள் சிறியதா யம்மே
சொற்றகுறிக் களவிலையென் கன்னிமா ரறியச்
சொன்னேன்பொய் யலநாங்கள் சொன்னதுசொன் னதுவே. ()

முன்னொருநா ளம்மைதடா தகைபிறந்த நாளின்
முகக்குறிகண் டிவளுலக முழுதாளு மென்றேன்
பின்னொருநாள் கைக்குறிபார்த் தம்மையுனக் கெங்கள்
பிஞ்ஞகர்தா மணவாளப் பிள்ளையென்று சொன்னே
னன்னையவண் மெய்க்குறிக ளனைத்தையும்பார்த் துனக்கோ
ராண்பிள்ளை யுண்டுபிறந் தரசாளு மென்றேன்
சொன்னகுறி யெல்லாமென் சொற்படியே பலிக்குந்
தொகுத்துநீ நினைந்தகுறி யினிச்சொலக்கே ளம்மே. (உ௩

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஒருகாலங் கஞ்சியுமென் குஞ்சிதலைக் கெண்ணெயுமோ
ருடுப்பு மீந்தாற்
பொருகால வேற்கண்ணாய் மனத்துநீ நினைந்தவெல்லாம்
புகல்வன் கண்டாய்
வருகால நிகழ்காலங் கழிகால மூன்றுமொக்க
வகுத்துப் பார்த்துத்
தருகாலந் தெரிந்துரைப்ப தெளிதரிதன் றெங்கள்குறச்
சாதிக் கம்மே. (உஅ)

## சிந்து

குங்குமஞ்சந் தனக்குழம்பிற் குழைத்துத்தரை மெழுகிக்
கோலமிட்டுக் குங்குலியக் கொழும்புகையுங் காட்டிச்
செங்கனக நவமணிக டிசைநான்கும் பரப்பித்
தென்மேலை மூலைதனிற் பிள்ளையாரும் வைத்துப்
பொங்குநறு மலரறுகோ டைங்கரர்க்குச் சாத்திப்
புழுகுநெய்வார்த் திடுவிளக்கு நிறைநாழி வைத்து
மங்கையருக் கரசியெங்க ளங்கயற்கண் ணமுதை
மனத்துள்வைத்து நினைத்தகுறி யினிச்சொலக்கே ளம்மே. ()

முந்நாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா
முறத்திலொரு படிநெல்லையென் முன்னேவை யம்மே
இந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்தோர் கூற்றை
இரட்டைபட வெண்ணினபோ தொற்றைபட்ட தம்மே
உன்னுமுன் வெள்ளிமலைப் பிள்ளையார்வந் துதித்தா
ருன்கினியெண் ணினகரும மிமைப்பினிற்கை கூடு
மென்னுமெ யெங்கள்குலக் கன்னிமா ரறிய
வக்குறிதப் பினுந்தப்பா திக்குறிகா ணம்மே. (உகூ)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

சொல்லளர் திட்ட போது நிமித்தநன் றிடத்தெ ழுந்த
பல்லியும் வாத்தே சொல்லும் பத்தினிப் பெண்கள் வாயாற்
சொல்லிய வாய்ச்சொ லன்றித் தும்மலு நல்ல தேகா
ணல்லது கிளைகூட் டும்புற் றுந்தைவீச் சழகி தம்மே. (உஎ)

## சிந்து

கொண்டுவா வம்மேகை கொண்டுவா வம்மே
  கொழுங்கனக் நவமணிக ளீந்திடுமுன் கையே
வண்டுசுலா மலர்கொய்ய வருந்திடுமுன் கையே
  வருந்தினர்க்கு நவநிதியுஞ் சொரிந்திடுமுன் கையே
புண்டரிகம் பூத்தழகு பொலிந்திடுமுன் கையே
  புழுகுறுநெய்ச் சொக்கர்புயந் தழுவிடுமுன் கையே
அண்டர்நா யகியெங்கண் மதுரைநா யகியை
  அங்கயற்கண் ணாயகியைக் கும்பிடுமுன் கையே. (உஅ)

அம்மேநின் செங்கையைநின் கொங்கையில்வைத் ததுதா
  னபிடேகச் சொக்கருனை யணைவரென்ற குறிகா
ணிம்மேலைத் திகையினிற்கை யெடுத்ததுவு மவர்தா
  மின்றந்திப் பொழுதினில்வந் தெய்துவரென் றதுகாண்
கைம்மேற்கை கட்டியதுந் தப்பாம லுனக்குக்
  கைகூடு நீநினைத்த காரியமென் றதுகாண்
செம்மேனி மணிவயிற்றிற் கைவைத்த தினிநீ
  சிறுவர்பதி னறுவரையும் பெறுவையென்ற தம்மே. (உகூ)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அங்கைத் தலத்துத் தனரேகை யளவில் செல்வந் தருமுனது
செங்கைத் துடிதென் மதுரேசர் செம்பொற் புயத்திற் சேர்க்கு
விங்கிப் படிபுத் திரரேகை யெவர்க்கு மிலையிப் படிதோளிற்
றங்கு மறுவங் கயற்கணம்மை தன்னோ டிருக்கத் தருமம்மே. (ஙய)

## சிந்து

பொன்பொதியுந் துகிலெனவெண் புயலொடுதண் பனிமூடுந
தென்பொதிய மலையாட்டி பேரைச்சொல்லாய் பாடநான். (௩௧)

பலநதிகள் புணர்ந்தநதிப் பதியையணை யாதவைகைக்
குலநதித்தண் டுறைச்செல்வி பேரைச்சொல்லாய் பாடநான். (௩௨)

அன்பாண்டு கல்வலிதென் றவ்வைபா டியவெங்க
டென்பாண்டி நாட்டாடன் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௩)

பொன்மாடஞ் சூழ்ந்தகரும் புயலமலன் போர்வைநிகர்
பன்மாடக் கூடலாள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௪)

எண்டிசைக்கும் வேம்பாயெம் மிறையவர்க்குக் கரும்பாகும்
வண்டிசைக்குந் தாரினள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௫)

தினவட்ட மிடும்பரிதித் திண்பரிமண் பரியாக்குங்
கனவட்ட வாம்பரியாள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௬)

திக்கயங்கள் புறங்கொடுப்பத் திசையெட்டுந் திறைகொண்ட
கைக்கயத்தை மேற்கொண்டாள் பேரைச்சொல்லாய் பாடநான். ()

ஆனேற்றுங் கொடியானை யைங்கணையான் வென்றிடவம்
மீனேற்றின் கொடியுயர்த்தாள் பேரைச்சொல்லாய் பாடநான். ()

இனியானை யிலையரசர்க் கென்றுதிசை யெட்டுமொரு
தனியானை செலுத்தினள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௯)

கருமலையச் செருமலையுங் கைம்மலைய மன்னர்தொழ
வருமலையத் துவசனருண் மடக்கொடியைப் பாடுவனே. (௪0)

விண்புரக்குங் கதிர்மௌலி முடிகவித்து வெண்குடைக்கீழ்
மண்புரக்கு மபிடேக வல்லியைநான் பாடுவனே. (௪௧)

வெம்புருவச் சிலைகுனித்து விழிக்கணைக ளிரண்டெடுத்தை
மொய்ம்புருவத் தொடுத்தெய்த மொய்குழலைப் பாடுவனே. (௪௨)

ஊன்கொண்ட முடைத்தலையிற் பலிகொண்டார்க் குலகேழுந்
தான்கொண்ட வரசாட்சி தந்தாளைப் பாடுவனே. (௪௩)

வானவர்கோன் முடிசிதறி வடவரையிற் கயலெழுது
மீனவர்கோன் றனைப்பயந்த மெல்லியலைப் பாடுவனே. (௪௪)

கான்மணக்குஞ் சடைக்காட்டிற் கவின்மணக்குங் கடிக்கொன்றைத்
தேன்மணக்கும் பிறைநாறுஞ் சீறடியைப் பாடுவனே. (௪௫)

எவ்விடத்துந் தாமாகி யிருந்தவருக் கருந்தவரும்
வெவ்விடத்தை யமுதாக்கும் விரைக்கொடியைப் பாடுவனே. (௪௬)

வைத்தபகி ரண்டமெனு மணற்சிற்றி லிழைத்திழைத்தோர்
பித்தனுடன் விளையாடும் பெய்வளையைப் பாடுவனே. (௪௭)

இலைக்குறியுங் குணமுமக் கென்பார்க்கு வினைக்குறியு
முலைக்குறியு மணிந்திட்ட மொய்குழலைப் பாடுவனே. (௪௮)

ஒன்றாகி யனைத்துயிர்க்கு முயிராகி யெப்பொருளு
மன்றாகி யவையனைத்து மானாளைப் பாடுவனே. (௪௯)

பாசிருக்குந் தமிழ்க்கூடற் பழியஞ்சிச் சொக்கருட
னாசிருக்கு மங்கயற்கண் ணாரமுதைப் பாடுவனே. (௫௰)

கோச்சகக்கலிப்பா

நீர்வாழி தென்மதுரை நின்மலனா ரருள்வாழி
கார்வாழி யங்கயற்கட் கன்னிதிரு வருள்வாழி
சீர்வாழி கச்சிநகர்த் திருமலைபூ பதிவாழி
பேர்வாழி யவன்செல்வம் பெரிதூழி வாழியவே. (௫௧)

மீனாக்ஷியம்மைகுறம்
முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்

மதுரைமீனாக்ஷியம்மை

# இரட்டைமணிமாலை

### நேரிசைவெண்பா

கார்பூத்த கண்டத்தெங் கண்ணுதலார்க் கீரேழு
பார்பூத்த பச்சைப் பசுங்கொம்பே—சீர்கொள்
கடம்பவனத் தாயேநின் கண்ணருள்பெற் றாரே
யிடம்பவனத் தாயே யிரார். (க)

### கட்டளைக்கலித்துறை

இராநின் றதுஞ்சொக்க ரெண்டோள் குழைய விருகுவட்டாற்
பொராநின் றதுஞ்சில பூசலிட் டோடிப் புலவிநலந்
தராநின் றதுமம்மை யம்மண வாளர் தயவுக்குள்ளாய்
வாராநின் றதுமென்று வாய்க்குமென் னெஞ்ச மணவறையே. (உ)

### நேரிசைவெண்பா

மதம்பரவு முக்கண் மழகளிற்றைப் பெற்றுக்
கதம்பவனத் தேயிருந்த கள்வி—மதங்க
னடியார்க் குடம்பிருகூ றாக்கினாள் பார்க்கிற்
கொடியார்க் கிலைகொல் குணம். (௩)

### கட்டளைக்கலித்துறை

குணங்கொண்டு நின்னைக் குறையிரந் தாகங் குழையப்புல்லி
மணங்கொண் டவரொரு வாமங்கொண் டாய்மது ரேசரவர்
பணங்கொண் டிருப்ப தறிந்துகொள் ளாயம்மை பைந்தொடியார்
கணங்கொண் டிறைஞ்சு நினக்குமுண் டாற்பொற் கனதனமே. (௪)

### நேரிசைவெண்பா

கனமிருக்குங் கந்தரார்க்குன் கன்னிநா டீந்தென்
றினமிரப்ப தோவொழியார் தேனே—பனவனுக்காப்
பாமாறி யார்க்குனைப்போற் பாரத் தனமிருந்தாற்
றமாறி யாடுவரோ தான். (ரு)

### கட்டளைக்கலித்துறை

தானின் றலகு தழையத் தழைந்த தமிழ்மதுரைக்
கானின்ற பூங்குழற் கர்ப்பூர வல்லி கருங்கட்செய்ய
மீனின் றுலாவி விளையா டுவதுவிண் ணுறலைய
வானின்ற தோர்வெள்ளி மன்றாடு மானந்த மாக்கடலே. (சு)

### நேரிசைவெண்பா

கடம்பவன வல்லிசெல்வக் கர்ப்பூர வல்லி
மடந்தை யபிடேக வல்லி—நெடுந்தகையை
யாட்டுவிப்பா ளாடலிவட் காடல்வே றில்லையெமைப்
பாட்டுவிப்பு துங்கேட் பதும். (எ)

### கட்டளைக்கலித்துறை

பதுமத் திருவல்லி கர்ப்பூர வல்லிநின் பாதபத்ம
மதுமத் தொடூர்தம் முடிவைத்த வாமது ரேசரவு
ரிதுமத்தப் பித்தமன் றேழைமை முன்ன ரிமையவர்கைப்
புதுமத் தினைப்பொற் சிலையென் றெடுத்த புராந்தகர்க்கே. (அ)

### நேரிசைவெண்பா

தருமே கடம்பவனத் தாயேநின் சிற்றி
லகமேயென் னெஞ்சகம தானன்—மகிழ்வநெடும்
வாழாநின் றுயிம் மனையிருண்மூ டிக்கிடப்ப
தேழாய் விளக்கிட் டிரு. (க)

### கட்டளைக்கலித்துறை

இரைக்கு நதிவைகை பொய்கைபொற் றாமரை யீர்ந்தண்டமிழ்
வரைக்கு மலைதென் மலயம தேசொக்கர் வஞ்சநெஞ்சைக்

கரைக்குங் கனகள்வி கர்ப்பூர வல்லிக்குக் கற்பகத்தார்
நிரைக்கும்பொற் கோயி றிருவால வாயுமென் னெஞ்சமுமே. (ய)

நேரிசைவெண்பா

நெஞ்சே திருக்கோயி னீலுண் டிருண்டகுழன்
மஞ்சேர் தபிடேக வல்லிக்கு—விஞ்சி
வருமந் தகாவென் வழிவருதி யாலிக்
கருமந் தகாவுன் கருத்து. (கக)

கட்டளைக்கலித்துறை

தருவால வாய்நொந் தறமெலிந் தேற்கிரு காண்மலரைத்
தருவால வாய்நின்ற தொன்றுத வாய்வன் றடக்கைக்குநேர் [ண்ட
பொருவால வாயெட்டுப் போர்க்களி றேந்துபொற் கோயில்கொ
திருவால வாய்மருந் தேதென்னர் கோன்பெற்ற தெள்ளமுதே. ()

நேரிசைவெண்பா

தென்மலையுங் கன்னித் திருநாடும் வெள்ளிமலைப்
பொன்மலைக்கே தந்த பொலங்கொம்பே—நின்மா
முலைக்குவடு பாய்ச்சுவடு முன்காய மாலம்
மலைக்குவடு வன்றே மணம். (கந)

கட்டளைக்கலித்துறை

மணியே யொருபச்சை மாணிக்க மேமருந் தேயென்றுன்னைப்
பணியேன் பணிந்தவர் பாலுஞ்செல் லேனவர் பாற்செலவுந்
துணியேன் றுணிந்தவை யென்னுரைக் கேன்மது ரைத்திருநாட்
டணியே யனைத்துயிர்க் கும்மனை நீயென் றறிந்துகொண்டே. (கச)

நேரிசைவெண்பா

கொண்டைச் செருக்குங் குறுநகையு நெட்டயிற்கட்
கெண்டைப் பிறக்கமும்வாய்க் கிஞ்சுகமுங்—கொண்டம்மை
கற்பூர வல்லி கருத்திற் புகப்புகுந்தா
னற்பூர வல்லியுமென் று. (கரு)

## கட்டளைக்கலித்துறை

நாவுண்டு நெஞ்சுண்டு நற்றமி ழுண்டு நயந்தசில
பாவுண் டினங்கள் பலவுமுண் டேபங்கிற் கொண்டிருந்தோர்
தேவுண் டுவக்குங் கடம்பா டவிப்பசுந் தேனின்பைந்தாட்
பூவுண்டு நாரொான் றிலையாந் தொடுத்துப் புனைவதற்கே. (கக)

## நேரிசைவெண்பா

புனைந்தாள் கடம்பவனப் பூவைசில பூவை
வினைந்தாளென் வாயும் மனமுந்—தினந்தினமும்
பொற்பதமே நாறுமவள் பூம்பதமன் றேநமது
சொற்பதமே நாறுஞ் சுவை. (கஎ)

## கட்டளைக்கலித்துறை

சுவையுண் டெனக்கொண்டு சூடுதி யான்மற்றென் சொற்றமிழ்க்
நவையுண் டெனவற நாணுதி போலு நகைத்தெயின்மூன் [கோர்
றவையுண் டவரொா டருட்கூடல் வைகுமம் மேசொற்பொருட்
கெவையுண்டு குற்ற மவையுண்டு நீவி ரிருவிர்க்குமே. (கஅ)

## நேரிசைவெண்பா

விண்டிருந்த பொற்கமல மீதிருந்த பொன்னினையுங்
கொண்டிருந்து குற்றேவல் கொள்ளுமாற்—றொண்டரண்டர்
தேங்காவில் வீற்றிருப்பத் தென்மதுரைக் கேகடப்பம்
பூங்காவில் வீற்றிருந்த பொன். (கக)

## கட்டளைக்கலித்துறை

பொற்பூர வல்லி கமலத்த ளேகொல் புகுந்தகமும்
வெற்பூர வல்லி பிறந்தக மும்மது வீட்டுமென்னே
யற்பூர வல்லியெம் வன்னெஞ்சக் கஞ்சத்தெம் மையனெடுங்
கற்பூர வல்லி குடிபுகுந் தேன்ற காரணமே. (உ௰)

மீனாக்ஷியம்மையிரட்டைமணிமாலை
முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

# மதுரைக்கலம்பகம்

## காப்பு

### கட்டளைக்கலித்துறை

புந்தித் தடத்துப் புலக்களி றோடப் பிளிறதொந்தித்
தந்திக்குத் தந்தை தமிழ்க்குத வென்பதென் றண்ணளிதூய்
வந்திப் பதுந்தனி வாழ்த்துவ தும்முடி தாழ்த்துநின்று
சிந்திப் பதுமன்றிச் சித்தி விநாயகன் சேவடியே.

---

### மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா

மணிகொண்ட திரையாழி சுரிநிமிர மருங்கசைஇப்
பணிகொண்ட முடிச்சென்னி யரங்காடும் பைந்தொடியும்
பூந்தொத்துக் கொத்தவிழ்ந்த புனத்துழாய் நீழல்வளர்
தேந்தத்து நறைக்கஞ்சத் தஞ்சாயற் றிருந்திழையு
மனைக்கிழவன் றிருமார்பு மணிக்குறங்கும் வறிதெய்தத்
தனக்குரிமைப் பணிபூண்டு முதற்கற்பின் றலைநிற்ப
அம்பொன்முடி முடிசூடு மபிடேக வல்லியொடுஞ்
செம்பொன்மதிற் றமிழ்க்கூடற் றிருநகரம் பொலிந்தோய்கேள்.

இஃது எட்டடித்தரவு

விண்ணரசும் பிறவரசுஞ் சிலரெய்த விடுத்தொருநீ
பெண்ணரசு தரக்கொண்ட பேரரசு செலுத்தினையே.

தேம்பழுத்த கற்பகத்தி னறுந்தெரியல் சிலர்க்கமைத்து
வேம்பழுத்து நறைக்கண்ணி முடிச்சென்னி மிலைச்சினையே.
வானேறுஞ் சிலபுள்ளும் பலரங்கு வலனுயர்த்த
மீனேறே வானேறும் விடுத்தடிக ளெடுப்பதே.
மனவட்ட மிடுஞ்சுருதி வயப்பரிக்கு மாறன்றே
கனவட்டந் தினவட்ட மிடக்கண்டு களிப்பதே.
விண்ணாறு தலைமடுப்ப நனையாநீ விரைப்பொருநைத்
தண்ணாறு குடைந்துவைகைத் தண்டுறையும் படிந்தனையே.
பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்
வழிந்தொழுகுந் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே.

இவையாறும் ஈரடித்தாழிசை.

அவனவ ளதுவெனு மவைகளி லொருபொரு
ளிவனென வுணர்வுகொ டெழுதரு முருவினை.
இலதென வுளதென விலதுள தெனுமவை
யலதென வளவிட வரியதொ ரளவினை.
குறியில னலதொரு குணமில னெனநினை
யறிபவ ரறிவினு மறிவரு நெறியினை.
இருமையு முதவுவ தெவனவ னெனநினை
தருமையை யுணர்வுறி னமிழ்தினு மினிமையை.

இவைநான்கும் ஈரடியாரகம்.

வைகைக்கோ புனற்கங்கை வானதிக்கோ சொரிந்துகடை
செய்கைக்கென் றறியேமாற் றிருமுடிமண் சுமந்ததே.
அரும்பிட்டுப் பச்சிலையிட் டாட்செய்யு மன்னையவ
டரும்பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பிற் கட்டுண்டே.
மலைகொண்டு குழைத்திட்ட மொய்வளைகை வளையன்றோ
மலைகொண்ட புயத்தென்னீ வளைகொண்டு சுமந்ததே.

ஊன்வலையி லகப்பட்டார்க் குட்படாய் நின்புயத்தோர்
மீன்வலைகொண் டதுமொருத்தி விழிவலையிற் பட்டன்றே. (௪)

இவைநான்கும் ஈரடித்தாழிசை

போகமாய் விளைந்தோய் நீ, புவனமாய்ப் பொலிந்தோய் நீ,
ஏகமா யிருந்தோய் நீ, யெண்ணிறந்து நின்றோய் நீ.

இவைநான்கும முச்சீரோரடி யம்போதரங்கம்

வானு நீ, நிலனு நீ, மதியு நீ, கதிரு நீ,
ஊனு நீ, யுயிரு நீ, யுளது நீ, யிலது நீ.

இவையெட்டும் இருசீரோரடி யம்போதரங்கம்

எனவாங்கு, இது தனிச்சொல்

பொன்பூத் தலர்ந்த கொன்றைபீர் பூப்பக்
கருஞ்சினை வேம்பு பொன்முடிச் சூடி
அண்ணலா னேறு மண்ணுண்டு கிடப்பக்
கண்போற் பிறழுங் கெண்டைவல னுயர்த்து
ரு வரியுடற் கட்செவி பெருமூச் செறியப்
பொன்புனை ந் தியன்ற பைம்பூண் டாங்கி
முடங்குளைக் குடுமி மடங்கலந் தவிசிற்
பசும்பொன்சும் பிருந்த பைம்பொன்முடி கவித்தாங்
கிருநிலங் குளிர்தூங் கொருகுடை நிழற்றி
ய முரசுவீற் றிருந்த வாதியங் கடவுணின்
பொன்மலர் பொதுளிய சின்மலர் பழிச்சுது
மைம்புல வழக்கி னருஞ்சுவை யறியாச்
செம்பொருட் செல்வநின் சீரடித் தொழும்புக்
கொண்பொருள் கிடையா தொழியினு மொழிக
கரு பிறிதொரு கடவுட்குப் பெரும்பயன் றருஉ
மிறைமையுண் டாயினு மாக குறுகினின்
சிற்றடி யவர்க்கே குற்றேவ றலைக்கொண்

டம்மா கிடைத்தவா வென்று
செம்மாப் புறூஉந் திறம்பெறற் பொருட்டே. (க)

இது பத்தொன்பதடி நேரிசையாசிரியச்சுரிதகம்

## நேரிசைவெண்பா

பொருனன் கொருங்கீன்ற பொன்மாடக் கூட
லிருணன் றிருண்டகண்டத் தெம்மான்-சரணன்றே
மண்டுழா யுண்டாற்குக் கண்மலரோ டொண்மவுலித்
தண்டுழாய் பூத்த தடம். (உ)

## கட்டளைக்கலித்துறை

தடமுண் டகங்கண் டகத்தாள தென்றுநின் றண்மலர்த்தா
ணடமுண் டகமகங் கொண்டுய்ந்த வாவினி நங்களுக்கோர்
திடமுண் டகந்தைக் கிடமுண் டிலையெனத் தேறவிண்ணோர்
விடமுண்ட கந்தா சுந்தா சுந்தர மீனவனே. (ங)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மீனேறுங் கொடிமுல்லை விடுகொல்லைக் கடிமுல்லை
வெள்ளைப் பள்ளை
ஆனேறும் வலனுயர்த்த வழகியசொக் கர்க்கிதுவு
மழகி தேயோ
கானேறுங் குழல்சரியக் கர்ப்பூர வல்லிதலை
கவிழ்ந்து நிற்ப
ஊனேறு முடைத்தலையிற் கடைப்பலிகொண் டேருர்புக்
குழலு மாறே. (ச)

## கட்டளைக்கலித்துறை

மாற்றொன் றிலையென் மருந்துக்கந்
தோசொக்கர் மாலைகொடார்
கூற்றொன் றலவொரு கோடிகெட்
டேன்கொழுந் தொன்றுதென்றற்

